

கீதா நிலையப் பிரசுரம் நிர். 1.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
**ஸ்ரீமத் சங்கராச்சார்ய சுவாமிகள்**
திருவாய் மலர்ந்தருளிய வடமொழி
ஆத்மபோதத்தின் மொழிபெயர்ப்பான

# ஆன்ம போதத் தாலாட்டு.

மதுரை, ராயல் பிரஸில் அச்சிடப்பட்டது.

1938௵ மார்ச்சு௴ ஈஸ்வர௵ பங்குனி௴

**இதன் விலை:** 0-0-6

# முகவுரை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீமத் சங்கராச்சார்ய சுவாமிகள் பிரம்ம சூத்திரம் உபநிஷத்து பகவத்கீதை ஆகிய பிரஸ்தானத்திரயத்திற்கும் பாஷ்யம் எழுதி முடிந்த பின் அவை வடமொழியில் பாண்டித்தியமுள்ளவர்களே தெரிந்துக்கொள்ளத் தக்கனவாயிருப்பதையெண்ணி, வடமொழியில் சாமானிய ஞானமுள்ளவர்களும் தெரிந்து கொள்ளத்தக்கதாயும், சகலவேதாந்த சாஸ்திரங்களின் சாரமாயும் இருக்கத் தக்கதாய் ஒரு நூல் இயற்றவேண்டுமென்று திருவுளங்கொண்டு, '**ஆத்மபோதம்**' என்னும் கிரந்தத்தை உலகோபகாரமாக இயற்றியருளினுர்கள் என்று ஆன்றேர் வாக்கின் மூலமாய்த் தெரியவருகிறது. இந்த **ஆத்மபோதத்திலுள்ள** கருத்துக்களை உள்ளது உள்ளபடியே அமைத்து, மதுரை டி.ஆர்.பத்மநாபய்யர் என்பார் தமிழ்த் தாலாட்டுப் பிரபந்தமாகப் பாடியுள்ளார். இச்சிறு நூல் வேதாந்த சாஸ்திரத்தில் பிரிய முள்ள ஒவ்வொருவரிடத்தும் இருந்தால் நல்ல பிரயோஜனம் அடையலாமென்று எண்ணுகிறேம். இதைப்போன்று இன்னும் பிற நூல்களையும் தமிழில் இயற்ற இறைவன் இவருக்கு உற்சாகமும் உறுதியும் அளிப்பாராக.

முகாம்
வேகவதி வடகரை,
மதுரை, 5-2-1938.

இப்படிக்கு,
**ஸ்வர்க்காசிரம பிரஹ்மஸ்ரீ**
**சுவாமி சங்கரானந்த பாரதி**.

## சில அபிப்பிராயங்கள்.

கோவிலூர் மடாலயம் 2-ம் பாடம் பூஜ்யஸ்ரீ **கணபதி சுவாமிகள்** எழுதியது: -

ஆன்ம போதமென்னும் நூலை ஆரிய பாஷையிலிருந்து யாவர்க்கும் விளங்கு ம்படி அழகிய செந்தமிழில் தாலாட்டுப் பிரபந்தமாகத்தந்தவர் தென்மதுரையில் சௌராஷ்ட்ர மரபில் பத்மநாபய்யர் என்னும் நாமம் உடையவராம். ஆசார்யாள் திருவாய் மலர்ந்தருளிய வேறு பல நூல்களையும் தமிழ்ப்பிரபந்தங்களாக்க இவருக்கு இறைவன் நீண்டஆயுளும் உற்சாகமும் அளிப்பாராக.

---

மதுரை பிரம்மானந்த சுவாமிகள் மடாலயம், பூஜ்யஸ்ரீ **சோமசுந்தர சுவாமிகள்** எழுதியது: -

ஸ்ரீமான் பத்மநாபய்யர் அவர்கள் தான் அனுபவித்த அத்வைதச் சுவையினை முமுட்சுக்களனைவரும் அனுபவிக்கக் கருதி, ஆத்ம போதத்தாலாட்டு எனப்பெயரிய இந்நூலினைத் தெளிவாக எளிய நடையிற்செய்து என்னிடத்தில் வாசித்துக் காட்டினுர்கள். அது மிகவும் கவின்வாய்ந்து கற்போற்குப் பேரின்பத்தை விளைவிக்கு மாகலான் முமுட்சுக்களனைவரும் இந்நூலினை ஆதரிக்கவேண்டுவதுடன் இதனைப் போன்று மேன் மேலும் பலநூல்களியற்றி உலகுக்கு இதஞ்செய்யவேண்டிப் பெருநாள்வாழும் வண்ணம் எல்லாம் வல்ல இறைவன்றிருவருள் செய்வாராகப் பன்முறை வேண்டுகின்றனன்.

---

மதுரை ஸ்ரீவிவேகானந்தசுவாமிகள் மடாலயம் பூஜ்யஸ்ரீ **கு.ச.ரெங்காச்சார்லு பாகவதர்** அவர்கள் எழுதியது: -

ஆசார்ய சுவாமிகளின் ஆத்மபோதத்தை இனிய எளிய தாலாட்டுப் பிரபந்த மாகப் பாடியிருப்பதைப் பார்த்ததில், எனக்குப் பரம சந்தோஷமுண்டாயிற்று. இதை இயற்றிய பத்மநாபய்யரவர்களுக்கு விற்பக்தியும், ஞானமும் மேன்மேலும் விருத்தி யாகவேண்டுமென்று குருநாதனைப்பன்முறையும் பிரார்த்தித்துக்கொள்ளுகிறேன்.

---

மதுரை சாந்தி ஆசிரம பூஜ்யஸ்ரீ **வி. எஸ். இராமய்யர்** அவர்கள் எழுதியது: -

**"கேயம் கீதா நாமஸஹஸ்ரம்"** என்னும் ஆசார்யாளின் **"பஜகோவிந்த"** மொழிக்கிணங்க கீதை 700 சுலோகங்களையும் நெட்டுரு செய்து தினந்தினம் விஷ்ணு சஹஸ்ர நாமத்துடன் பாராயணம் செய்து வருபவரான டி. ஆர். பத்மநாபய்யர் என்பார் ஆசார்யசுவாமிகளின் ஆன்மபோதம் என்னும் கிரந்தத்தைத்தமிழ்த்தாலாட்டு ரூபமாகப்பாடியிருப்பது அதன் மொழி பெயர்ப்பாகவும், எல்லோர்க்கும் சிரமமின்றிப் பொருள் விளங்கும் எளிய நடையிலும் அமைந்திருக்கிறது. கீதை 700 சுலோகங்க

ஊயும் 700 வெண்பாக்களாக இவர் பாடிவைத்திருக்கும் நூலையும் வெகுசீக்கிரம் அச்சியற்றி வெளிப்படுத்தினுல் முமுட்சுக்களுக்கு மிகவும் பயன்படுமென்று எண்ணு கிறேன். இறைவன் திருவருள் புரிவாராக.

---

மதுரை பூஜ்யஸ்ரீ **முத்து பாரதியாரவர்கள்** எழுதியது: -

ஜகத்குரு அருளிச்செய்த ஆத்மபோதம் முமுட்சுக்களுக்கு அப்பியாசக்கிரம் முதல் ஜீவன் முக்தி, விதேக முக்தி வரையில் சொல்லிகுருமுகமாக விசாரணை செய்து வரவேண்டியது என்ற குருபக்தியையும் காண்பித்து அருளியிருக்கிறுர்கள். அதன் கருத்துக்களை மாறின்றி அமைத்து எழுகப்பட்டிருக்கும் இந்தத் தாலாட்டில், விரசமோ, சொல்குறைவோ, பக்திக்குறைவோ இத்யாதி தோஷங்கள் இல்லை. குருபக்தியின் மகிமையால் எழுதப்பட்டிருக்கிறது. சாதுக்கள் அனைவரும் இந்தப் புஸ்தகத்தைப் பக்தியாய் அனுஷ்டித்தால் தப்பாமல் ஜீவன்முக்தி அடையலாம்.

---

மதுரை ஆனந்தாசிரம பூஜ்யஸ்ரீ **த.கு.சு. உமாபதிஅய்யர்** அவர்கள் எழுதியது: -

சம்ஸ்கிருத பாஷையில் ஆசார்யாள் திருவாய் மலர்ந்தருளிய **'ஆத்மபோதம்'** என்னும் கிரந்தத்தை எளிய தமிழ் நடையில் தாலாட்டாகச் செய்துள்ள தொ.ரா. பத்மநாபய்யருடைய முயற்சி முமுட்சுக்களுக்கு பயன் தரக்கூடியதாகும். இதைப் போல இன்னும் பல நூல்கள் இயற்ற எல்லா வசதிகளும் இவருக்கு ஏற்பட வேண்டு மென்று எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

---

ஓம்.தத்சத்.

# ஆன்ம போதத் தாலாட்டு.

## காப்பு.

ஆன்மபோ தந்தன்ஊ யைங்கானே தாலாட்டாய்
நான்முயற்சி செய்துரைக்க நாடினேன் - மான்மழுவைத்
தாங்குசிவ னம்சமெனுஞ் சங்கரர்தாஞ் சொன்னபொருள்
தாங்கிடவே நற்றமிழைத் தா.

## அவையடக்கம்.

வடமொழியிற் சங்கரர்தாம் மன்னியுரைசெய்த
திடமுள வான்ம போதக்கைப் - படிமிசையே
தாலாட்டு நூலாகத்தானமைத்தேன் தாரணியோர்
பாலூட்டி யேவளர்ப்பீர் பார்த்து.

தாண்டவராயன்றமிழ்போல் தத்துவரா யன்மொழிபோல்
பூண்ட மொழிப் பண்பிதற்குப் போகாதே - யாண்டுமுள
சூரியன்முன்மின்மினியாய்ச் சொல்லுவமைபோன்றுளதால்
சீரியரே காக்கவருட் செய்து.

பிழையுள தென்றலும் பெற்றோர்தம் மக்கள்
மழஊலயைக் குற்றமென மாட்டார் - பழைய நூல்
பாங்கமையா தேனும் பனுவலிது பண்புயர்ந்தோர்
தீங்கமையா தாக்கிடுவார் தேர்ந்து.

1 சீராரும் அத்துவித தேசிகராய்ச் சிறந்திருந்து
பேராரும் பொருளுரைக்கப் பெருமானே வந்தவரோ!

2 மலமொழிந்த தவமுளராய் மனத்தமைகி நிராசையுடன்
நிலமிசைவாழ் முமுட்சுவுக்கேநிகழ்த்துவழியென்றவரோ!

3 வீடுபெறற் கானவழி வேறுபல வுண்டெனினும்
நீடுபெறு ஞானமது நேர்வழியாம் என்றவரோ!

4 சமையலுக்கு நெருப்பெனவே சாதனமாம் ஞானமது
அமையாதபேர்கள்முக்தி அடையார்காண் என்றவரோ!

5 அவித்தைக்குக் கன்மமுற வாதலினுல் அழிக்காதாம்
அவித்தைக்கு வித்தையுண்டேல் அல்லுக்கெல் என்றவரோ!

6 மேகத்தால் மறைப்புண்ட வெய்யவன்போல் அஞ்ஞான
மேகத்தால் வெகுவான்மா விளங்குமா லென்றவரோ!

7 மேகமது விலகியதும் விளங்குமோர் விரிகதிர்போல்
ஏகமாய் ஆன்மாவும் இலகும்பின் என்றவரோ!

8 ஞானமஞ் ஞானிதஊன நலம்பெறநிர்மலமாக்கித்
தானுந்தேற் றும்பொடிபோல் தணியுமா லென்றவரோ!

9 இச்சைவெறுப்பேநிறைந்த இச்சகமோர்சொப்பனம்போல்
விச்சைவரு மட்டுநிசம் விளக்கமின்றிப் பின்னசத்தே.

10 உற்றதொரு கிளிஞ்சல்வெள்ளி உண்மையெனல் போற்சகமும்
முற்றுநிறை வாம்பிரம முணருமட்டும் என்றவரோ!

11 சத்துச்சித்தனுஸ்யூத சமமாகுமான்மாவில்
அத்தஊயும்பொன்னிற்பணியாவதுபோ லென்றவரோ!

12 எங்குமே பரந்தவெளி இடத்தாலே பலவாகி
பங்குபடல் போலான்மா பலபோலு மென்றவரோ!

13 உபாதியிஊன யொழித்தபொழு தொன்றுகும் வெளிபோல
உபாதியாந் தேகங்கள் ஒழித்தொன்று மான்மாவே.

14 சாதிவரு ஞச்சிரம தருமமெலா முபாதியினுல்
பேதமாம் தண்ணீரும் நிலத்தியல்பே பெறுவதுபோல்

15 பஞ்சீக ரணத்தால் படைத்திடுமோர் தேகமது
சஞ்சிதமாம் கர்மசுக துக்கமுணச் சார்விடமே.

16 அந்தவபஞ் சீகிருக பூசுத்தா லாக்கியதாம்
இந்திரியம் பத்துமனம் புத்தியெரி பிராணனுமே

17 கூடியசூக் குமதேகம் கோரியது தானுகா
நீடியசா தனமாக நீணிலத்திற் சொன்னவரோ!

18 அநாதியா மவித்தையது அநிர்வாச் சியமாகும்
விநோதமா மிதைத்தானே விளம்பினர்கா ரணமென்றே.

19 ஆகியமூன் றுபாதிகளுக் கன்னியமாய்த் தானிருக்கும்
தேகியையே தானெனவே தெளிந்திடுவா யென்றவரோ!

20 பலவர்ணத் துணியாலே படிகநிறம் போலான்மா
இலகியவைங் கோசகுணம் எய்துமெனச் சொன்னவரோ!

21 ஐங்கோச வுமிதவிடா தியவெல்லா மகற்றியுள்ளே
தங்கிடுமாத் துமவரிசி தானெடுப்பா யென்றவரோ!

22 எப்பொழுது மெவ்விடத்து மிருந்திடுமான் மாவெனினும்
எப்பொழுதும் எவ்விடத்தும் எவர்க்கும் விளங்காததுவே.

23 சுத்தமாம் புத்தனிற்றேன்றிடுமாம் சுத்தமிலாப்
புத்திதனில் இதுஎன்றும் பொருந்தாதா மென்றவரோ!

24 இந்திரிய முடல்மனது எழில்மதியா மிவைக்கயலாம்
அந்தக்கர ணக்கரியை அரசன்போல் என்றவரோ!

25 சந்திரனு மோடுதலாய்த் தான்காணல் போன்மூடர்
இந்திரியத் துறுமான்மா ஏற்குமதன் றெழிலென்பார்.

26 உலகமெலா மாதித்தன் ஒளிதனையே ஏற்றிருந்து
இலகியதந் தொழிலியற்றி ஏற்றமுறல் போலுடலில்

27 ஆன்மசை கன்னியத்தை ஆசிரயிக் தேகரணம்
மேன்மையுறும் புத்திமனம் மேவித்தந் தொழிற்புனையும்

28 நீலாதி வர்ணமெலாம் நிகழாத வானிடத்தே
மேலோது வண்ணமெலாம் மேதினியோர் பார்த்திடல் போல்.

29 தேகேந்திரியமாதி செய்தொழிலைச் சீவரெலாம்
வாகான வான்மாவில் மாற்றுகின்றுர் அறியாதே.

30 சலனமுறுஞ் சலத்தோற்றச் சந்திரனு மசைவதுபோல்
மலமிலாவான்மாவும் மனத்துறலாற் செயலுளதே.

31 எனினுமதற் கெச்செயலு மிருக்குமென லஞ்ஞானர்
கனிலுதித்த கற்பனையே கானதுவா மென்றவரோ!

32 இச்சையும் துக்கசுகம் எழிலான்மா தனக்கிலையாம்
நிச்சயமாய்ப் புத்தியதாம் நித்திரையில் நீங்கிடலால்.

33 அருக்கனுக் கொளிபோலும் அப்புவிடை சீதளம்போல்
நெருப்புக்கோ ருஷ்ணமும் போல் நீக்கமற வான்மாவில்

34 சச்சிதா னந்தகுணம் சந்ததமுந் தான் விளங்கும்
இச்சகத்தில் இக்குணத்தால் இசையறிவா யென்றவரோ!

35 புத்தியுமே ஆன்மவொளி பொருந்தியே இவ்வுலகில்
நத்தியொரு விவகாரம் நானறிவே னெனச்செயுமால்.

36 ஆன்மாவெச் செயலுமிலான் அந்தக்க ரணத்துறவே
நான்கருத்தா பார்ப்பனென நவைபடுமால் என்றவரோ!

37 கயிற்றினை யேகட்செவியாய்க் காண்பதுபோல் ஆன்மாவை
பயிற்சியிலாச் சீவனெனப் பார்த்திடலாற் பயமாமே.

38 சீவனல பரனெனவே திடஞானம் உண்டாகில்
மேவியதோர் பயமிலதாம் மேதினியில் என்றவரோ!

39 என்றும்வி ளக்கொளியே இருட்பொருளை விளக்குதல் போல்
ஒன்றுன ஆன்மவொளி உறுப்பையெலாம் விளக்கிடுமே.

40 விளக்கினைவி ளக்கிடற்கு விளக்கொன்றும் வேண்டிலதே
விளக்கமுறுந் தனைவிளக்க வேறென்று மிங்கிலையே.

41 உபாதியெலாஞ் சோதனையால் ஒவ்வொன்றுய்நீக்கிடலால்
நபாதியெலுஞ் சொற்போமே நாமாக மிஞ்சுவமே.

42 இந்த நல்லுபாயத்தால் எழிலுறு மாவாக்கியஞ்சொல்
பந்தமறு சிவசீவ ஐக்கியத்தைப் பகர்ந்தவரோ!

43 அவித்தையின்கா ரியமாகும் திருசியங்க ளத்தனையும்
உவர்கடலிற் புற்புகம்போல் ஒழியுமென வுரைத்திடலால்

44 இவையெலாம் விடுக்கயலாய் எழிலுறுநிர் மலமாகும்
அவனேநா னெனநாடாய் அவன்பிரம் மென்றவரோ!

45 தேகத்திற் கன்னியமாய்த் தேசுடையோ னுதலினுல்
தேகத்து றுசன்மசபை சிதைவுசா வெற்கிலையே.

46 இந்திரியத் தினும்வேறய் யானிருக்கும் காரணத்தால்
ஐந்துசக்க பரிசரூப ரசகந்தத் தொடர்பிலையே.

47 மனத்திநும்வே ருகுவனுன் வளரிச்சை துக்கமுதல்
கனத்தபயம் துவேஷமுமெக் காலத்து மெனக்கிலேயே.

48 பேரியலான் மாவென்றும் பிராணன்மன மலவென்னுஞ்
சீரிபநல் வேதவுரை தெளிவுறுத்திச் சொன்னவரோ!

49 நிர்க்குணனுன் நிஷ்கிரியன் நித்தியனுன் நிர்விகற்பன்
நிர்மலனுன் நிரஞ்சனனே நிராகாரி நித்யமுக்தன்.

50 நிர்விகார னாகுவன்யான் நீக்கமற நிறைவான்போல்
சர்வசமச் சுத்தனும்யான் சங்கமிலான் அச்சுதனே.

51 நிர்மலனுன் அசலன்யான் நித்யசுத்த முத்தனும்யான்
சர்வகா ரணனேகன் சத்துச்சித்தா னந்தனே;

52 சத்தியம்ஞா னம் அனந்தம் சஜாதீய மாதியிலான்
இத்தகையாம் பிரமம்யான் என்னவே நிரந்தரமும்;

53 அப்பியா சஞ்செயலால் அஹம்பிரம வாசனையே
ஒப்பிலா ஔடதம்போல் உற்றவவித்தையையரிக்கும்

54 ஏகாந்த விடத்திருந்து இச்சையற்று இந்தியங்கள்
வாகாய்த்தன் வயத்திருக்க வைத்தவனுய் எப்பொழுதும்.

55 அன்னியத்தில் நோக்கமையா தகத்தமைந்த நோக்கினனுய்
உன்னுகவே தன்னையன்றி ஒருபொருளுமில்லையென.

56 பரமார்த்தப் பொருளுணர்ந்தோன் பகருமுரு வண்ணம்விட்டு
பரிபூர்ண சிதானந்த பரிதனுய்த் திதிபெறவே

57 அறிவும் அறிபொருளும் அறிவானெனும்பேதம்
நிறைபரம தரிசனத்தில் நேருவதில் லென்றவரோ!

58 சிதானந்த மேகமதாய்ச் சிறந்தொளிரு மான்மாவே
சதாவிலே விளங்குமென அனுபவித்துச் சொன்னவரோ!

59 ஆன்மா அரணையதாய் ஆக்கியே தியானமெனும்
மேன்மையுறு மதனத்தை விவேகமுடன் செய்துவா

60 அதிலிருந்து தோன்றுவதாம் அக்கினியின் ஜுவாலையிலே
முதியதாம் அஞ்ஞானம் முற்றும்வே மென்றவரோ!

61 அருணனுல் இருட்கூட்டம் அகல்வதுபோல் ஞானத்தால்
இருதயத்தின் அஞ்ஞான இருள்நீங்கு மென்றவரோ.

62 சூரியநற் சோதியும்பின் சுடர்வீசித் தோன்றிடல் போல்
பேரியலாத் துமவொளியும் பிறங்கு மெனச் சொன்னவரோ!

63 ஆன்மா அனைவருக்கும் அண்மையிலே தானிருந்தும்
என்காணு தெனினவித்தை இருப்பதினு லென்றவரோ!

64 அவித்தையொழி வாற்புதிதாய் அடைவதுபோற் காணுமிந்த
பவித்திரமா மான்மாகழுத்தணியைப் போல் என்றவரோ!

65 தாணுவிற்பு ருடன்போலச் சார்ந்ததொரு பிராந்தியினுல்
காணுமிந்த பிரமத்தே சீவனெனக் காட்டினரோ!

66 சீவனுடை யுண்மையினைச் செவ்வையாய்க் கற்றுணர்ந்தால்
மேவுமந்த பிராந்தியும் போய்ப் பிரமமிஞ்சு மென்றவரோ!

67 திக்குதிசை தெரியாமல் திரிந்தலையும் காலையொளி
மிக்கரவி யாற்பிரமை விலகுவது போலுலகில்

68 உண்மையுரு வனுபவித்தே உணர்ந்தநன் ஞானத்தால்
மண்மிசையான் எனதென்னும் மடமைகெடு மென்றவரோ!

69 செவ்வையாய்க் கற்றுணர்ந்த தேசமைந்த யோகியென்பான்
எவ்வளவுந் தனைவிடுத்தில் லெனக்காண்பா னென்றவரோ!

70 ஆன்மாவே ஜகத்தெல்லாம் அயலொன்று மில்லையெனும்
பான்மையது மனந்தெளிய உவமைபல பகர்ந்தவரோ!

71 மண்ணினுற் கடகலசம் வடிவாக்கி வைத்துளதேல்
மண்ணைவிடுத் தவையயலோ மற்றதுபோ லென்றவரோ!

72 இச்சகத்தில் சீவன்முக்தன் எய்தியவு பாதிவிட்டு
சச்சிதா னந்தனுய்த் தான்பிரம மாகுவனே.

73 புழுவேகு ளவியுருப் புனைவதெனு நியாயம்போல்
வழுவிலாச் சீவன்முத்தன் மாறில்பா னென்றவரோ!

74 மோகக் கடல்கடந்து மூடவிராக் கதரென்னும்
ராகத்து வேடமொழித் திராமனுய்ச் சாந்தியுற

75 யோகிவி ளங்கிடுவான் யூகமுயர் அறிவாலே
தேகியின் சுயவுருவைத்தெளிந்ததிடப்பி ரக்ஞையனே.

76 உபாதியிடத் துறுமுனிவன் உயர்வான்போ லொட்டாமல்
சுபோதனுய்த் தானிருப்பான் பாமரனுய்த் தோன்றிடவே.

77 ஆயுங்கா லிவன்நிஜலமை ஆசக்தி யற்றவனுய்
வாயுபோற் சஞ்சரிப்பான் வரம்பிலா வுறைவிடமாய்.

78 வெளிவிடயத் திச்சையற்று வித்துவான் ஆந்தரத்தில்
களியெய்தி தானிருப்பான் கடத்திலுள தீபமென.

79 நீரினீர் போலுபாதி நீக்கத்தால் நிர்விசேடச்
சீரியவான் மாபரத்திற் சேருவன்வான் வானிலென.

80 தேயுவிற் றேபுவெனச் சேருவதென் றுயிடுவான்
ஏயபிறப் பிறப்பை இழித்தொழித்தோன் என்றவரோ!

81 சிரேட்டமாம் லாபமெது சிரேட்டவா னந்தமெது
சிரேட்டமாம் ஞானமெது அதுபிரம மென்றவரோ!

82 எதுபார்த்த றிந்தபின்னர் இனிப்பார்க்க வேறிலதோ
எதுவாய்மு டிந்தபின்னர் இனிபிறக்க வேண்டிலதோ.

83 எதஜனயாமுணர்ந்தாற்பின் இனியுணரும் பொருளிலதோ
அதஜனயே பிரமமென ஆய்ந்துவுரை செய்தவரோ!

84 சர்பை ரிபூரணனுய்ச் சத்துசித்தா னந்தமாய்
நிர்விகற்ப நாசமிலா நித்தியனே என்றவரோ!

85 உகந்தபல் லுபநிடதத் துற்றவியா விருத்தியெழும்
அகண்டமா னந்தமொன்றும் அதுபிரம மென்றவரோ!

86 அந்தவகண் டானந்தத் தற்பமாச் சிரயித்தே
அந்தப் பிரமாதியர்கள் ஆனந்தராம் என்றவரோ!

87 அகிலமாம் சராசாத்தில் அதுகலவாப் பொருளிலதே
சகலமாம் காரியங்கள் தவிர்த்ததஜன நிகழாதே.

88 ஆதலால் அப்பிரமம் பாலிடையே ஆச்சியம்போல்
சேர்தலால் வத்துவெலாம் திகழ்பிரிய மென்றவரோ!

89 அணுவல்ல தூலமல அதுகுட்டை நெட்டையல
குணனுருவ னல்லனெனக் குறிப்பதுவா மென்றவரோ!

90 எந்தவொளி யாலருக்கன் இவ்வுலகில் ஒளிபெறுமோ
அந்தமிலா அதுபிரம மாகுமெனச் சொன்னவரோ ! ம

91 வெளிப்புறத்தும் உட்புறத்தும் வியாபகமாய்ப் பிரமமது
ஒளியேதா னாய்விளங்கும் உலயிரும்பி னுருண்டையென.

92 பிரமமோ ஜகத்தல்ல பிரமம்விட்டுஜகத்துமில
பிரமத்திற் கனியமுண்டேல் பேய்த்தேர்போல் என்றவரோ!

93 கண்டதும் கேட்டபொருள் பிரமத்தற் கயலிலதே
அண்டியநல் லனுபவத்தால் அத்துவி தானந்தமே.

94 எங்குமாய்ச் சத்துசித்தாம் எழிலான்மா தனையுணர்வோர்
தங்கியஞா னக்கண்ணிற் றகைசான்ற பெரியோரே.

95 அந்தகன் கண்ணுக்கே ஆதித்தன் விளங்கான்போல்
அந்தவான் மாவதனை அஞ்ஞானி காண்பதில.

96 சிரவணு திகளாலே செறிந்தவோர் ஞானச்சுடர்
உருமறைந்த சீவன்றனை உறுமலத்தின் வேறுக்கி

97 புடம்வைத்த பொன்னதுபோற் பொலிவுறவே சுயவுருவில்
உடம்பிலே வைகுமந்த உத்தமனைக் காட்டிடுமே.

98 இதயவான் றனிலுறையும் இந்தவான் மாஞான
உதயசூ ரியனொளியால் உள்ளிருளஞ் ஞானம்போய்,

99 உலகமெலாம் வியாபகமாய் உலகையெலாம் விளக்கியேதான்
உலகையெலாந் தரிப்பவனுய் உலகெலாம் உறைவானே.

100 இடங்காலம் திசைவேண்டா எழிலான்ம தீர்த்தமதில்
படிந்தெழுவோர் பாவமெலாம் பறந்தோடும் படிமிசையே

101 நித்தியமாம் சுகமளிக்கும் நிரஞ்சனமாந் தீர்த்தமிதை
நத்தியதோர் நிட்கிரியன் நாற்றிசையும் தான்விளங்கும்.

102 சீதாதி தோஷமிலாச் சிறந்தொளிருந் தீர்த்தமிதில்
பாதாதி கேசமுறப் படிந்தெழுவோன் பயனுரைக்கில்

103 எல்லாம் அறிபவனுய் என்றும் இருப்பவனும்
சொல்லால் இவன்பெருமை சொல்பவரார் என்றவரோ!

104 புனிதமுறும் இவ்வான்ம போதமெனும் நூலியற்றி
மனிதரைப் புனிதம்பெற வைத்தவரே கண்வளரீர்!

105 அத்துவித வுண்மையிஜன அவனியெலாந் தானுணர
வித்தகமாய்த் திக்விஜயம் செய்தவரே கண்வளரீர்!

106 உயர்பிரம சூத்திரமும் உபநிடதங் கீதைக்கெலாம்
யர்வின்றிப் பாடியத்தை அளித்தவரே கண்வளரீர்!

107 இல்லறத்தைப் பற்ருமல் இளமையிலே துறவணிந்து
நல்லறத்தை முடித்திருந்த நாயகனே கண்வளரீர்!

108 கோவிந்தாச்சாரியரைக் குருவாகத் தானடைந்து
மாவிந்தை யெலாமியற்று மன்னவனே கண்வளரீர்!

109 ஆலடியில் நால்வர்பொருட் டாகநீர் சொன்னவழி
காலடியில் கலியுகத்தில் காட்டினீர் வந்துதித்தே!

**ஓம்.தத் சத்.**

ராயல் பிரஸ், மதுரை - 38.

இந்நூல் கிடைக்குமிடம்: -
கீதா நிஜலயம்.
31, மால் 1 வது தெரு,
மதுரை.